[5th November 1958

SRI D. S. AUTHIMOOLAM: ஸார், இவ்விதம் குழந்தைகளுக்கு பிலிம் காண்பிப்பதினால் அவர்களுக்கு கிடைக்கிற லாபம் என்ன? இதனால் என்ன பெனிபிட் கிடைக்கிறது? அல்லது பழைய அசெம்பிளி கட்டிடத்தை எப்படியாவது உபயோகப்படுத்தவேண்டும் என்கின்ற காரணத்திற்காகத்தான் இது ஆரம்பிக்கப்பட்டதா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: இதில் என்னுடைய அபிப்பிராயத்தை கனம் அங்கத்தினர் அவர்கள் கேட்கிறார்கள் என்று நினைக்கிறேன். என்னுடைய அபிப்பிராயத்தில் நல்ல படங்களை குழந்தைகளுக்கு காண்பித்தால் அவர்களுக்கு நல்ல அறிவும் பண்பும் வளரும். [கெட்ட படங்களை காண்பித்தால் குழந்தைகளுக்கு கெட்ட அறிவும் பண்பும் தான் வளர முடியும்.

SRI V. SANKARAN : ஸார், சிறு பிள்ளைகளுக்கு எது போன்ற திரைப்படங்கள் காண்பிக்கப்படுகின்றன?

THE HON. SRI C. SUBRAMANIAM : குழந்தைகளுக்கு என்று தனியாக எடுக்கப்படுகின்ற படங்கள் காண்பிக்கப்படுகின்றன.

SRI R. KRISHNASAMI NAIDU : தலைவர் அவர்களே, ஜில்லா தாலுகா தலைநகரங்களில் இந்த மாதிரியான தியேட்டர்கள் கட்டுவதற்கு பொதுமக்கள் முன்வந்தால் அரசாங்கம் மான்யம் கொடுப்பதற்கு தயாராக இருக்குமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்போது அந்த திட்டம் நம்மிடத்தில் இல்லை. அதிலும் பொதுமக்களாகவே தியேட்டர்கள் கட்டுவதாக இருந்தால் அதை அரசாங்கம் வரவேற்கும்.

SRI N. R. THIAGARAJAN : இப்போது புதிது புதிதாக "தகப்பன் மகளுக்கு கட்டிய தாலி" "பாட்டன் பேத்திக்கு கட்டிய தாலி" என்றெல்லாம் படங்கள் வெளி வந்துகொண்டிருக்கின்றன. இந்த படங்கள் எல்லாம் இந்த தியேட்டர்களில் காட்டப்படுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்த படங்களையெல்லாம் குழந்தைகள் பார்க்காமல் இருக்கவேண்டும் என்பதற்காகத்தான் இம்மாதிரிப்பட்ட குழந்தைகளுக்கு என்று எடுக்கப்பட்ட படங்களை காண்பிப்பதற்காக ஏற்பாடு செய்யப்பட்டிருக்கின்றது.

MR. SPEAKER : 875-ம் கேள்வியையும் 876-ம் கேள்வியையும் ஒன்றாக எடுத்துக்கொள்ளலாம்.

*Food poisoning*

* 875 Q.—SRI N. K. PALANISAMI, SRI. M. P. SARATHI, SRI S. LAZAR, SRI S. PAKKIRISAMI PILLAI, SRI S. M. ANNAMALAI, SRI A. VEDARATHNAM AND SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) the number of food poisoning cases in this State, districtwise;

(b) the number of deaths due to food poisoning in this State, districtwise;

(c) whether the Government have investigated the cause of food poisoning in the State; and

(d) the steps taken by the Government to prevent further food poisoning in the State?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) to (*d*) A paper [a] is placed on the table of the House.

* 876 *Q*.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether reports of food poisoning in the State have been received by the Government; and

(*b*) if so, the action taken to seize the contaminated foodstuffs and articles?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) The attention of the hon. Member is drawn to the answer given to Starred Question No. 875.

SRI N. K. PALANISAMI : ஸார், இம்மாதிரி உணவு விஷயத்தில் பாதிக்கப்பட்டதின் காரணம் "பாலிடால்" என்கிற விஷத்தினால் தானா? அல்லது இவ்வாறு உணவில் விஷம் கலப்பதற்கு வேறு காரணம் என்ன?

THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் அங்கத்தினர் அவர்கள் இந்த ஸ்டேட்மெண்டை படிக்கவில்லை என்று நினைக்கிறேன். "பாலிடால்" விஷத்தினால் பாதிக்கப்படவில்லை. உணவில் ஏற்பட்ட அசுத்தம் காரணமாகவும், கலாய் பூசாத பாத்திரங்களில் உணவை சமைப்பதினாலும் இவை ஏற்பட்டது என்று தெரிகிறது.

SRI S. LAZAR : "பாலிடால்" விஷத்தினால் இது ஏற்படவில்லை என்று ஸ்டேட்மெண்டிலிருந்து தெரிகிறது. ஆனால் இம்மாதிரி பல கிராமங்களில் ஏற்பட்டிருக்கின்றன. இவைகளை தவிர்ப்பதற்கு அரசாங்கம் என்னென்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டது என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இது சாதாரணமாக பப்ளிக் ஹெல்த் டிபார்ட்மெண்ட் மூலமாக சுகாதாரமாக வாழ்க்கை நடத்த வேண்டுமென்று பிரச்சாரம் செய்யப்பட்டது வருகிறது. அதன் மூலமாகத் தான் இவைகளை நீக்க முடியும் என்று நம்புகிறேன்.

SRI S. M. ANNAMALAI : ஸார், அமைச்சர் அவர்கள் கொடுத்திருக்கின்ற ஸ்டேட்மெண்டில் பாலிடால் போன்ற விஷம் உணவில் கலக்கவில்லை என்று தெரிகிறது. ஆனால் சேலம் மாவட்டத்தில் 55 பேர்கள் மாண்டு இருக்கிறார்கள். உணவில் விஷம் கலக்கவில்லை என்று சொன்னால் வேறு என்ன காரணம் இருக்க முடியும் ? சமீபத்தில் களம்பூரில் உணவில் விஷம் கலந்ததின் காரணமாக சிலர் பாதிக்கப்பட்டிருப்பதாகச் சர்க்காருக்குத் தெரியுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU : களம்பூர் விஷயம் சர்க்காருக்குத்தெரியாது. உணவுகளை சுகாதாரமான முறையில் வைத்திருக்க வேண்டும் என்று சொல்லப்பட்டு வருகிறது. அதோடு சுகாதாரமான முறையில் உணவுகள் வைக்கப்படாததினால்தான் இவ்விதம் ஏற்பட்டது என்று தெரிகிறது. ஆனால் இம்மாதிரி ஏற்பட்டதில் 154 பேர்களில் மூன்று பேர்கள் இறந்து போயிருப்பதாக சர்க்காருக்குத் தெரிய வருகிறது.

SRI A. A. RASHEED : Sir, have cases of food-poisoning been reported from hotels and restaurants in the city recently ?

THE HON. SRI M. A. MANICKAVELU : Food poisoning happens not only in hotels but in other places also and in houses during functions such as, marriages, etc., by taking unwholesome food.

---

[a] Printed as Appendix II on pages 724–727 infra.